ஸ்ரீரஸ்து.

ஸ்ரீரங்கநாயிகாஸமேத ஸ்ரீரங்கநாதபரப்ரஹ்மணே நமஃ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவரங்கம் பெரியகோயில் விஷயமாகத் திருவவதரித்துள்ள

திவ்வியப்பிரபந்தப் பாசுரங்கள் கொண்ட

# திருவரங்கத் தமிழ்மாலை

இது,

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்ஸ்வாமி**

தொகுத்தது.


**ஸ்ரீரங்கம் தேவஸ்தான வெளியீடு.**

சென்னை ரத்தினம் கிளை அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது

கிடைக்குமிடம்: ஸ்ரீரங்கம் தேவஸ்தானம்

இதன் விலை 1—40

ஸௌம்ய௵ தைமீ புனர்பூசம்

1970

## திருவரங்கத் தமிழ்மாலையில்—

ஆண்டாள் பாடிய பதிகம் ஒன்று

**நாச்சியார் திருமொழியில்—பதினோராந்திருமொழி—தாமுகக்கும்**

**தாமுகக்கும்தங்கையில் சங்கமேபோலாவோ *
யாமுகக்குமென்கையில் சங்கமுமேந்திழையீர் *
தீமுகத்துநாகணைமேல் சேருந்திருவரங்கர் *
ஆமுகத்தைநோக்காரால் அம்மனேயம்மனே. 1

* * *—எம்பெருமானுடைய விச்லேஷம் நெடுகிச்செல்லவே, அதனால் உடல் ஈர்க்குப்போல் மெலிந்து கைவளைகளெல்லாம் கழன்றொழிந்தமையையும், இவ்வளவிலும் வந்து முகங்காட்டாத எம்பெருமானுடைய கொடுமையையுங் கூறி வருந்துகின்றாள். ஏந்திழையீர்! என்று அருகே வந்து நிற்கும் பெண்களை விளிக்கிறபடி. 'பெண்காள்!—தோழிகாள்!' என்னாதே ஏந்திழையீர் என்றது—என்னைப்போலவே வளையிழந்துவருந்தாதே, ப்ரளயத்துக்குத் தப்பிப் பிழைப்பாரைப்போலே நீங்கள் மாத்திரம் அவனுடைய விரஹத்துக்கு எப்படி தப்பிப்பிழைத்தீர்கள்? என வியந்து கேட்கிறபடிபோலும் "ஏந்திழையீர்! யாமுகக்குமென்கையிற் சங்கமும் தாமுகக்கும் தம்கையிற்சங்கமேபோலாவோ?—என்று அப்பெருமானைக் கேளுங்கள்" என்று வாக்யசேஷம் பூரித்துக்கொள்ளவேணும். 'நம் கையிலுள்ள சங்கு எப்போதும் நம் கையிலேயே இருக்கவேணும்' என்று அவர் ஆசைப்படுவதுபோல், நானும் 'நம் கையிலுள்ள சங்கு நம் கையிலேயே இருக்கவேணும் என்று ஆசைப்பட ப்ராப்தி இல்லையோ? அவருடைய ஆசை மாத்திரம் வழுவாமல் பலித்துவிடவேணும், என்னுடைய ஆசைமாத்திரம் பாழ்த்துப் போகவேணுமென்று இஃது என்ன விபரீதஸங்கல்பம்? என்று அவரையேபோய்க் கேளுங்கள் என்கிறாள்.

எழிலுடையவம்மனைமீர் என்னரங்கத்தின்னமுதர் *
குழலழகர்வாயழகர் கண்ணழகர் * கொப்பூழில்
எழுகமலப்பூவழகர் எம்மானார் * என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையேயாக்கினரே. 2

* * *—திருவரங்கத்திலே எனக்கு போக்யமான அமுதம்போன்று எழுந்தருளியிருப்பவராய், திருக்குழலழகும் திருவதரத்தினழகும் திருக்கண்ணழகும் திருநாபிக்கமலத்தழகும் பொலியநின்று இவ்வழகையெல்லாங்காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவரான பெரிய பெருமாள் தப்பாக ஒன்றுஞ்செய்யவில்லை; யுக்தமாகவே செய்தார்; நான் கழலாதவளையை இட்டுக்கொண்டிருந்தேனாகில் அவரும் அதனைக் கழலாதவளையாகவே அமைத்துவைப்பர்; நான் கழல் வளையிட்டுக் கொண்டேனாகையாலே அவர் அதை அந்வர்த்தமாக்கினார்; என்மேல் குற்றமேயன்றி அவர் மேல் என்ன குற்றமிருக்கிறது? உள்ளதை உள்ளபடி செய்பவரன்றோ அவர். நான் கழலாதவளையை இட்டுக்கொண்டிருந்து அவர் அதைக் கழல்வளையாக ஆக்கினாராகில் அப்போது ஒருவாறு அவர்மேல் குற்றஞ்சாட்டலாம்; நானே கழல்வளையிட்டுக்கொண்டேனான பின்பு அதை அவர் அந்யதாகரிக்க எப்படிகடவர்? என்று ஏஸோக்தியாக அருளிச்செய்கிறாள். இது நர்மோக்தி எனவும்படும். கைவளைக்குக் கழல்வளையென்று இடுகுறிப்பெயர். அதனைக் காரணப்பெயர்போலக்கொண்டு "தாமுங்கழல்வளையேயாக்கினரே" என்றாள். கழன்றொழியும்வளை யாதலால் கழல்வளை எனப் பெயர் வந்ததென்கிறாளாய்த்து. .... .... .... (2)

**பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் *
அங்காதுஞ்சோராமே ஆள்கின்றவெம்பெருமான் *
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார் *
எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே. 3

* * *—கடல் சூழ்ந்த மண்ணுலகும் விண்ணுலகுமாகிய உபயவிபூதியையும் அபாயலேசமுமின்றி ரக்ஷித்தருளுமவனுய், என்னை ஒரு மூன்ரும் விபூதியாக ஆளுமவனுய், திருவரங்கத்திலே பள்ளிகொண்டருளினபடியே செங்கோல் செலுத்துமவனுன எம்பெருமான் இப்படி அவாப்த ஸமஸ்தகாமனுயிருந்து வைத்தும் குறைவாளன்போன்று என்னுடைய கைவளையைக் கொள்ளைகொண்டு போனுன்; போயிடுக; இவ்வளையினுல் அவனுடைய தாரித்ரியமெல்லாம் தொலைக.

மச்சணிமாட மதிளரங்கர்வாமனனுர் *
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற *
பிச்சைக்குறையாகி யென்னுடையபெய்வளைமேல் *
இச்சையுடையரேல் இத்தெருவேபோதாரே. 4

* * *—பெரிய பெருமாள் முன்பு தாம் மஹாபலியிடத்திலே யாசகராக எழுந்தருளி அவனிடத்தில் உதகதாராபூர்வகமாக பிக்ஷைவாங்கிக்கொண்ட பிச்சையில் குறையுண்டாகி அக்குறையை என்கையாலே தீர்த்துக்கொள்ள வேணுமென்ற ஆவலுடையவராய் என்கைவளையிலே ஆசையுடையவராகில் அஸுரனுடைய யஜ்ஞபூமியிலே நடந்தநடையை இத்தெருவே என்முன்னே காட்டலாகாதோ? (4)

பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று *
எல்லாவுலகும் அளந்துகொண்டவெம்பெருமான் *
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான் *
இல்லாதோம்கைப்பொருளும் எய்துவானுெத்துளனே. 5

* * *—விலக்ஷணமான வாமநரூபத்தைப் பரிக்ரஹித்து அழகிய கையிலே நீரேற்றுப் பிச்சைவாங்கி, பிச்சையிட்டவன் குடிவாழ்வதற்கும் ஓரடிமண்மிகாதபடி ஸகலலோகங்களையும் அளந்து ஸ்வாதீனப்படுத்திக்கொண்ட மஹானுபாவர், தரித்ரரான நம்முடைய கைப்பொருளையும் [அதாவது—இந்த வுடம்பையும்] கொள்ளை கொள்வார்போலே இராநின்ருர் அந்தோ! .... ... (5)

கைப்பொருள்கள்முன்னமே கைக்கொண்டார் * காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனுர் *
எப்பொருட்கும்நின்ருர்க்கும் எய்தாது * நான்மறையின்
சொற்பொருளாய்நின்ருர் என்மெய்ப்பொருளும்கொண்டாரே. 6

* * *—எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியாயிருந்து கொண்டு ஒருவர்க்கும் கைப்படாமல் வேதவேத்யராயிருக்கும் பெரியபெருமாள் என்கையிலுள்ள பொருள்களை முன்னமே கைக்கொண்டார்; கடைசியாக சரீரமென்கிற ஒரு வஸ்து மிகுந்திருந்தது; அதையும் கொள்ளைகொண்டாரென்கிருள். மெய்ப்பொருளும் **கொண்டார்**=**மெய்** என்று ஆத்மாவையும் சொல்லக் கடவதாகையாலே, ஆத்மீயங்களை ஏற்கெனவே கொள்ளை கொண்டவர் இப்போது ஆத்மாவையும் கொள்ளை கொண்டார் என்பதாகவும் உரைக்கலாம். ... .... ... (6)

உண்ணுதுறங்காது ஒலிகடலையூடறுத்து *
பெண்ணுக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம் *
திண்ணர்மதில்சூழ் திருவரங்கச் செல்வனுர் *
எண்ணுதேதம்முடைய நன்மைகளேயெண்ணுவரே. (7)

* * *—'தமக்கு மேற்பட்டாரொருவருமில்லாதபடி பரமபுருஷராயிருக்குமவரை ஒரு மானிடப்பெண்ணுகிய நீ இப்படியெல்லாஞ் சொல்லுவது தகுதியோ? அவருடைய மேன்மை எங்கே? உன்னுடைய கீழ்மை எங்கே? இதை ஆராயாமல் நீ அப்பெரியவரைப் பழிப்பது சிறிதும் பொருந்தாது' என்று சில மாதர்கள் ஆண்டாளை நோக்கிக் கூற, அதற்கு மறுமாற்றமுரைக்கின்ருள். அப்பெரியவர் ராமாவதாரத்தில் பட்டபாடுகள் தெரியாதா? ஒரு பெண்பெண்டாட்டியின் உடம்

பிலே ஆசைகொண்டு அந்த ஆசாபாசபாரவச்யத்தாலே ஊணுமின்றி உறக்கமுமின்றி அவளுடைய பிரிவுக்கு ஆற்ருமல் நோவுபட்டு வானரப்படைகளைத் துணைகொண்டு கடலிலே அணைகட்டுகையாகிற அருந்தொழிலைச்செய்து இப்படிகளாலே தாம் வெளிப்படுத்திய பைத்தியத்தை ஸ்ரீராமாயணம் நடையாடுந் தேசத்திலே அறியாதாருண்டோ? ஒரு பெண்ணுக்காக அப்பாடுபடலாமோ? அது அவருடைய மேன்மைக்குத் தகுமோ? அது தகுமாகில், எனக்காகவும் அவர் அப்பாடுபட்டிருக்க வேண்டாவோ? என்னிடத்தில் மாத்திரமேயோ அவர் மேன்மை பாராட்டியிருக்கவேணும்? என்கிருள். ... ... .... (7)

பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்குப்பண்டொருநாள் *
மாசுடம்பில்நீர்வாரா மானமிலாப்பன்றியாம் *
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனுர் *
பேசியிருப்பனகள் பேர்க்கவும்பேராவே. 8

* * *—ஸ்ரீதேவிக்காகப் பட்டபாட்டைச் சொன்னுள் கீழ்ப்பாட்டில்; பூமிப்பிராட்டிக்காகப் பட்டபாட்டைச் சொல்லுகிருள் இப்பாட்டில். பூமிப்பிராட்டியானவள் வெகுகாலம் ஜலத்துக்குள்ளே முழுகிக்கிடந்தபடியால் பாசிபடர்ந்து கிடந்தமைபற்றிப் "பாசிதூர்த்துக்கிடந்த" என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப்பன்றி=ஒரு பூமிப்பிராட்டி பக்கலிலே அமர்ந்த ஆசையினுல் ஒரு சரீரத்தைப் பரிக்ரஹித்தவன், அழுக்குடம்பினரான நாமெல்லாருங்கூட அருவருக்கும்படியாய் அத்யந்தஹேயமான பன்றிவடிவத்தையோ பரிக்ரஹிக்கவேணும்? 'உடம்பு அழுக்கேறிற்று' என்று லஜ்ஜிக்கவுமறியாத ஜன்மத்தையன்ரே ஏறிட்டுக்கொண்டது. (நீர்வாருதல்—நீர்பெருகுதல்.) .... (8)

கண்ணுலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணுர்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *
அண்ணுந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணுளன்பேணுமூர் பேருமரங்கமே. 9

* * *—கல்யாண ஸந்நாஹங்களையெல்லாம் பரிஷ்காரமாகச் செய்து முடித்துக் கல்யாணப் பெண்ணுன ருக்மிணிப்பிராட்டியைப் பாணிக்ரஹணம் செய்துகொள்ளப்போவதாக ஸம்சயமில்லாமல் நிச்சயமாக நினைத்திருந்த சிசுபாலனுனவன் அவமானப்பட்டு ஆகாசத்தை நோக்கிக் கிடக்கும்படியாக நேர்ந்த அச்சமயத்திலே அந்த ருக்மிணிப்பிராட்டியைப் பாணிக்ரஹணம் செய்தருளினவனுய், பெண்பிறந்தார்க்கெல்லாம் துணைவன் என்று ப்ரஸித்தனுன பெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கிற திவ்யதேசத்தினுடைய திருநாமமும் திருவரங்கமாம். .... (9)

செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னுஞ்சொல் *
தம்மிடையேபொய்யானுல் சாதிப்பாராரினியே. 10

* * *—(மனமொழிமெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்கையாகிற) செம்மைக்குணமுடைய ஸ்ரீரங்கநாதர் (முன்பு) தம்வாயாலே அருளிச்செய்த ஸத்யமானதும் பெருமைபொருந்தியதுமான சரமச்லோகரூபமான வார்த்தையை (என் திருத்தகப்பனுரான) பெரியாழ்வார் (குருமுகமாகக்) கேட்டு (அதில் சொல்லியிருக்கிறபடி) நிர்ப்பரராயிருப்பர்; "தம்மை விரும்பினவர்களைத் தாமும் விரும்புவர்" என்ற பழமொழியானது தம்மிடத்திலேயே பொய்யாகப்போய்விட்டால் அதற்குமேல் (அவர்தம்மை) நியமிப்பார் ஆர்? (யாருமில்லை.)

திருவரங்கத்தமிழ்மாலையில் ஆண்டாள் பதிகப்பாடல் முற்றுப்பெற்றது.

திருவரங்கத்தமிழ்மாலையில் திருமங்கையாழ்வார் பதிகங்கள் ஐந்து.

## பெரியதிருமொழி—ஐந்தாம்பத்து—நான்காந்திருமொழி—உந்திமேல்

**உந்திமேல்நான்முகனைப் படைத்தான்உலகுண்டவ
னெந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கு இடமென்பரால் *
சந்திரேடுமணியுங்கொழிக்கும் புனல்காவிரி *
அந்திபோலும்நிறத்தார்வயல்சூழ் தென்னரங்கமே. 1

| | |
|---|---|
| சந்திரேடு | சந்தனக் கட்டைகளையும் |
| மணியும் | நவரத்னங்களையும் |
| கொழிக்கும் | தள்ளிக்கொண்டு பெருகுகின்ற |
| புனல் | தீர்த்தத்தையுடைத்தான |
| காவிரி | திருக்காவிரி நதியாலும், |
| அந்தி போலும் நிறத்து ஆர் வயல் | ஸந்தியாகாலம்போன்ற வர்ணத்தையுடைய கழனிகளினுலும் |
| சூழ் | சூழப்பட்ட |
| தென் அரங்கம் | திருவரங்கமானது,— |

| | |
|---|---|
| உந்தி மேல் | (தனது) திருநாபியிலே |
| நான்முகனை | பிரமனை |
| படைத்தான் | ஸ்ருஷ்டித்தவனும் |
| உலகு உண்டவன் | (பிரளயகாலத்தில்) லோகங்களை அமுது செய்தவனும் |
| எந்தை பெம்மான் | எம் குலத்துக்கு நாதனானவனும் |
| இமையோர்கள் தாதைக்கு | நித்யஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானுக்கு |
| இடம் | வாஸஸ்தலம் |
| என்பர் | என்று சொல்லுவர்கள். |

***—அந்திபோலும் நிறத்தார்வயல்=அந்தியென்றது ஸாயம் ஸந்தியாகாலத்தை ; அது இருள்மூடிக் கறுத்துத் தோற்றுமாதலால். "கருநெல்சூழ் கண்ணமங்கை", என்னுமாபோலே கருவடைந்த பயிர்களாலே வயல்கள் கறுத்துத் தோன்றுகின்றன வாம். இனி, ஸாயம் ஸந்தியாகாலத்தைச் செந்நிறமாக வருணிப்பர்களாதலால் அதற்குச் சேரப் பொருள் கொள்ளவேண்டில் 'நுனிநெல் பழுத்த வயலாலே சூழப் பட்ட' என்றுரைத்துக்கொள்க. ... ... ... (1)

வையமுண்டாலிலைமேவுமாயன் மணிநீண்முடி *
பைகொள்நாகத்தணையான் பயிலுமிடமென்பரால் *
தையனல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்துங்கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே. 2

| | |
|---|---|
| நல் தையலார் | நல்ல ஸ்த்ரீகளினுடைய |
| குழல் மாலையும் | தலையிலணிந்த பூமாலைகளும் |
| மற்று | இன்னமும் |
| அவர் | அந்த ஸ்திரீகளினுடைய |
| தட முலை | முலைத்தடங்களில்(பூசப்பட்ட) |
| செய்ய சாந்தும் | சிவந்த சந்தனமும் (ஆகிய இவற்றோடு) |
| கலந்து | சேர்ந்து கலங்கி |
| இழி | பிரவஹிக்கின்ற |
| புனல் | (காவிரித்) தீர்த்தத்தினுல் |
| சூழ் | சூழப்பட்ட |
| தென் அரங்கம் | திருவரங்கம்—, |

| | |
|---|---|
| வையம் உண்டு | (பிரளயத்தில்) பூமியை யெல்லாம் அமுது செய்து |
| ஆல் இலை | ஆலந்தளிரிலே |
| மேவும் | பொருந்திக் கண்வளர்கின்ற |
| மாயன் | ஆச்சர்ய சக்தியுக்தனும் |
| மணி நீள் முடி | மணிமயமான நீண்ட கிரீடமணிந்தவனும் |
| பை கொள் நாகத்து அணையான் | படங்கொண்ட திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுமான பெருமான் |
| பயிலும் இடம் என்பர் | நித்யவாஸம் பண்ணுகிற இடமென்று சொல்லுவர். |

பண்டிவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால் *
வண்டுபாடும் மதுவார்புனல் வந்திழிகாவிரி *
அண்டநாறும் பொழில்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 3

| | |
|---|---|
| வண்டு பாடும் | வண்டுகள் பாடப்பெற்ற |
| மது வார் | தேன் ஒழுகுகின்ற |
| புனல் | தீர்த்தமானது |
| வந்து இழி | வந்து பிரவஹிக்கின்ற |
| காவிரி | திருக்காவேரியினுலும் |
| அண்டம்நாறும் பொழில் | ஆகாசமெங்கும் பரிமளிக்கின்ற சோலைகளாலும் |
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகு ஆர் | அழகு பொருந்தியதான |
| | தென் அரங்கம்—; |
| பண்டு | முன்பொருகால் |
| இ வையம் | இப்பூமியை |
| அளப்பான் | அளந்து வசப்படுத்திக் கொள்வதற்காக |
| சென்று | போய் |
| மாவலி | மஹாபலியினுடைய |
| கையில் | கையில் நின்றும் |
| நீர் | தாந ஜலத்தை |
| ஆழி தடம் கை கொண்ட | திருவாழியை யேந்தவல்ல தடக்கையாலே ஏற்றுக் கொண்ட |
| குறளன் | வாமநமூர்த்தியினது |
| | இடம் என்பர்—. |

விளைத்தவெம்போர் விறல்வாளரக்கன் நகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக்கு இடமென்பரால் *
துளைக்கையானைமருப்புமகிலும் கொணர்ந்துந்தி * முன்
திளைக்குஞ்செல்வப் புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. 4

| | |
|---|---|
| துளைக் கை யானை | துதிக்கையையுடைய யானைகளின் |
| மருப்பும் | தந்தங்களையும் |
| அகிலும் | அகில் மரங்களையும் |
| கொணர்ந்து | அடித்துக்கொண்டுவந்து |
| முன் உந்தி | முன்னே தள்ளி |
| திளைக்கும் | லீலாரஸமனுபவிக்கிற |
| செல்வம் புனல் | திவ்யமானதீர்த்தத்தையுடைய |
| காவிரி | காவேரியினுல் |
| சூழ் | சூழப்பட்ட |
| | தென் அரங்கம்—; |
| வெம் போர் விளைத்த | கடுமையான யுத்தத்தை உண்டாக்கின |
| விறல் | பலிஷ்டனுன |
| வாள் அரக்கன் | வாட்படை செலுத்த வல்லனுன இராவணனுடைய |
| நகர் | நகரமாகிய இலங்கை |
| பாழ்பட | பாழாகும்படியாக |
| வளைத்த | வளைக்கப்பட்ட |
| வல் வில் தடகையவனுக்கு | வலியவில்லைத் தடக்கையிலே உடையவனுன பெருமானுக்கு |
| | இடம் என்பர்—. |

வம்புலாங்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னுல்முனிந்த அழகனிடமென்பரால் *
உம்பர்கோனுமுலகேழும் வந்தீண்டிவணங்கும் * நல்
செம்பொனுரும்மதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 5

| | |
|---|---|
| உம்பர்கோனும் | தேவர்களுக்கு நிர்வாஹகனுன பிரமனும் |
| உலகு ஏழும் | ஸப்த லோகங்களும் |
| வந்து | கிட்டி |
| ஈண்டி | திரண்டு |
| வணங்கும் | வணங்கப்பெற்றதாய் |
| நல் செம்பொன் ஆரும் மதிள் சூழ்ந்து | நல்ல செம்பொன் மயமான மதிள்களால் சூழப்பட்டு |
| அழகு ஆர் | அழகு பொருந்தியதான. |
| | தென் அரங்கம்—; |
| வம்பு உலாம் கூந்தல் | வாஸனை உலாவுகின்ற கூந்தலையுடையவளான |
| மண்டோதரி | மந்தோதரிக்கு |
| காதலன் | கணவனுன இராவணன் |
| வான் புக | வீரஸ்வர்க்கமடையும்படியாக |
| அம்பு தன்னுல் | பாணங்களினுல் |
| முனிந்த | சீறிக் கொன்றொழித்த |
| அழகன் | வீர ஸ்ரீயையுடையனுன இராமபிரானது |
| | இடம் என்பர்—. |

கலையுடுத்தவகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் வாழிடமென்பரால் *
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துந்தி * முன்
அலையெடுக்கும் புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. 6

| | |
|---|---|
| குலை எடுத்த | குலைகள் ஓங்கியிருக்கப்பெற்ற |
| கதலி பொழில் ஊடும் | வாழைத் தோப்புகளினுள்ளே |
| வந்து | புகுந்து |
| | அம்மரங்களை வேரோடே பறித்துக்கொண்டு |
| முன் உந்தி | முன்னே தள்ளி |
| அலை எடுக்கும் | அலைவீசியபடியாநின்ற |
| புனல் | தீர்த்தத்தையுடைத்தான |
| காவிரி சூழ் | காவேரியினால் சூழப்பட்ட |
| | தென் அரங்கம்—. |
| கலை உடுத்த | பட்டாடையணிந்த |
| அகல் அல்குல் | அகன்ற நிதம்பத்தையுடையளான |
| தாய் என | தாயாகிய யசோதைபோல் (வந்து) |
| முலை கொடுத்தாள் | முலையுண்ணக் கொடுத்தவளான |
| வன் பேய்மகள் | வலிய (பூதனையென்னும்) பேய்ச்சியினுடைய |
| உயிர் | பிராணனை |
| உண்டவன் | உறிஞ்சி உண்ட கண்ணபிரான் |
| வாழ் இடம் என்பர் | வாழும் திவ்யதேசம் என்று சொல்லுவர். |

கஞ்சனெஞ்சுங்கடுமல்லரும் சகடமுங்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் வாழிடமென்பரால் *
மஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * மாமறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையுங்கமழும் தென்னரங்கமே. 7

| | |
|---|---|
| மஞ்சு சேர் | மேகமண்டலத்தை அளாவியிருக்கிற |
| மாளிகை | மாளிகைகளிலுண்டான |
| நீடு அகில் புகையும் | அதிகமான அகிற்புகையும் |
| மா மறையோர் | சிறந்த வைதிகப்ராமணர்கள் |
| செம் சொல் வேள்வி | வேதங்களில் விதித்தபடியே நடத்துகிற யாகங்களிலுண்டான |
| புகையும் | ஹோமதூமமும் (சேர்ந்து) |
| கமழும் | பரிமளிக்கப்பெற்ற |
| தென் அரங்கம் | திருவரங்கமானது.— |
| கஞ்சன் நெஞ்சும் | கம்ஸனுடைய மனமும் |
| கடு மல்லரும் | கடிய மல்லர்களும் |
| சகடமும் | சகடாஸுரனும் |
| துஞ்ச | தொலையும் படி |
| காலினால் | திருவடியாலே |
| வென்ற | வென்றொழித்த |
| சுடர்ஆழியான் | உஜ்ஜ்வலமான திருவாழியையுடைய பெருமாள் |
| வாழ் இடம் என்பர் | நித்யவாஸம் பண்ணுமிடம் என்று சொல்லுவர்கள். |

ஏனமீனாமையோடு அரியுஞ்சிறுகுறளுமாய் *
தானுமாயதரணித்தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலுங்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. 8

| | |
|---|---|
| வானும் | விண்ணுலகத்திலுள்ளாரும் |
| மண்ணும் | மண்ணுலகத்திலுள்ளாரும் |
| நிறைய புகுந்து | ஏராளமாக வந்துசேர்ந்து |
| ஈண்டி | ஒன்றாகத் திரண்டு |
| வணங்கும் | வணங்கப்பெற்றதும், |
| நல் தேனும் பாலும் | மதுரமான தேனும் பாலும் |
| கலந்தன்னவர் | ஒன்றாகச் சேர்ந்தாற்போலே ஏகரஸராயிருக்கிற பக்தர்கள் |
| சேர் | சேர்ந்திருக்கப் பெற்றதுமான |
| | தென் அரங்கம்—, |
| ஏனம் மீன் ஆமையோடு அரியும் சிறு குறளும் ஆய் | வராஹமாகவும் மத்ஸ்யமாகவும் கூர்மமாகவும் நரஸிம்ஹமாகவும் வாமநனாகவும் திருவவதரித்தவனாய் |
| தானும் ஆய | ஸ்ரீராமபிரானாகவும் திருவவதரித்தவனான |
| தரணி தலைவன் | ஸர்வலோகேச்வரனுடைய |
| | இடம் என்பர்—. |

இவ்விடத்து வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது [illegible] :—"நித்யஸூரிகள் ஸம்ஸாரிகள் என்கிற வாசி தெரியாதே ஒரு [illegible] பரிமாறு நிற்பர்கள். தேசாந்தரங்களில் முன்பு கண்டறியாதார் வந்து போகப் [illegible] 'பிரிந்துபோகா நின்றோமே!' என்று கண்ணுங் கண்ணீருமாயிறே யிருப்பது" என்று.

சேயனென்றும்மிகப்பெரியன் நுண்ணேர்மையனாய * இம்
மாயையாருமறியாவகையான் இடமென்பரால் *
வேயின்முத்தும்மணியுங்கொணர்ந்து ஆர்புனல்காவிரி *
ஆயபொன்மாமதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 9

| | | | |
|---|---|---|---|
| வேயின் முத்தும் | மூங்கில்களில் நின்று உதிர்ந்த முத்துக்களையும் | என்றும் | எந்நாளும் |
| மணியும் | ரத்னங்களையும் | சேயன் | எட்டாமலிருப்பவன் |
| கொணர்ந்து | தள்ளிக்கொண்டுவந்து | மிக பெரியன் | மஹாபுருஷன், |
| ஆர் | நிறைந்திருக்கிற | நுண் நேர்மையன் | ஸௌக்ஷ்மமான பொருள்களிற் காட்டிலும் ஸௌக்ஷ்மத் தன்மை வாய்ந்தவன் |
| புனல் | தீர்த்தத்தையுடைய | ஆய | என்றிப்படி சொல்லக்கூடியதான |
| காவிரி | திருக்காவேரியாலும் | இ மாயை | இவ்வாச்சரியத்தை |
| ஆய | தகுதியான | ஆரும் அறியா வகையான் | ஒருவரும் அறியக்கூடாதபடி யிருப்பவனான ஸர்வேச்வரனுடைய |
| பொன் மா மதிள் | அழகிய பெரிய திருமதில்களாலும் | | இடம் என்பர்—. |
| சூழ்ந்து | சூழப்பட்டு | | |
| அழகு ஆர் | அழகு பொருந்தியிருப்பதான | | |
| | தென் அரங்கம்—; | | |

* * *—நுண்ணேர்மையன் என்றது ஸௌக்ஷ்ம வஸ்துக்களிற் காட்டிலும் மிகவும் ஸௌக்ஷ்மஸ்வரூபனாக வுள்ளவன் என்றபடி. "பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன், பரந்த வண்டமிதென நில விசும்பொழிவறக் கரந்த சிலிடந்தொறும் இடந்திகழ்பொருள்தொறும், கரந்தெங்கும் பரந்துளன்" என்கிறபடியே அதி ஸௌக்ஷ்மமான பதார்த்தங்களெங்கும் புக்கு வியாபித்துத் தரித்துக்கொண்டு நிற்கையாகிற இந்த சக்தியோகம் ஆர்க்கும் அறிய வொண்ணாத தென்கை. நேர்மை—நுட்பம். ("நுண்ணேர்மையினாய" என்று ஓதுவர்.) இப்படிப்பட்ட விசித்ர சக்தியுக்தனான பெருமான் வாழுமிடம் தென்னரங்கம். நவமணிகளைக் கொண்டு தள்ளுகின்ற திருக்காவிரியாலும் அழகிய திருமதிள்களாலும் சூழப் பெற்றதாம் இது. ... ... ... ... (9)

**அல்லிமாதரமருந்திருமார்வ னரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டுமுடன் *
வல்லவர்தாமுலகாண்டு பின்வானுலகாள்வரே. 10

| | | | |
|---|---|---|---|
| அல்லி மாதர் அமரும் | பூவிற் பிறந்த பெரியபிராட்டியார் பொருந்தி வாழப்பெற்ற | அரங்கத்தை | திருவரங்கம் விஷயமாக,— |
| | | கலலின் | கல்லாலே கட்டப்பட்ட |
| திரு மார்வன் | திருமார்வையுடையனான ஸர்வேச்வரனுடைய | மன்னு | திடமாயிருக்கிற |
| | | மதிள் | மதிளையுடைத்தான |

| | | | |
|---|---|---|---|
| மங்கையர் கோன் | திருமங்கை நகரில் உள்ளவர்களுக்கு தலைவரான | உடன் | கருத்தோடுகூட |
| கலிகன்றி | ஆழ்வார் | வல்லவர் தாம் | ஓதவல்லவர்கள் |
| சொல் | அருளிச்செய்த | உலகு ஆண்டு | இவ்வுலகில் (கோயில் வாழ்ச்சியை) அநுபவித்து |
| நல் இசை மாலைகள் | நல்ல இசையோடு கூடின சொல்மாலையாகிய | பின் | இவ்வுடல் நீங்கினபிறகு |
| நாலிரண்டும் இரண்டும் | இப்பத்துப் பாட்டுக்களையும் | வான் உலகு ஆள்வர் | பரமபதாநுபவத்தைப் பெறக்கடவர். |

**பெரியதிருமொழி—ஐந்தாம்பத்தில்—நான்காம் பதிகத்தின் உரை முற்றிற்று.**

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி—ஐந்தாம்பத்து—ஐந்தாம் பதிகம்—வெருவாதாள்

**அவதாரிகை :—** கீழ்த்திருமொழியும் இத்திருமொழியும் மேல்மூன்று திருமொழிகளும் ஆக ஐந்து பதிகங்கள் திருவரங்கம் பெரியகோயில் மங்களாசாஸநத் திருப்பதிகங்கள். கீழ்த்திருமொழி தாமானதன்மையிலே அருளிச்செய்யப்பட்டது. இத்திருமொழி அந்யாபதேசத்தாலே அமைந்தது. அதாவது—தாம் ஒரு பெண் பிள்ளையின் நிலைமையை அடைந்தாராய் [பரகாலநாயகியென்று பேர்பெற்று] தம்முடைய செய்திகளையும் ஸ்ரீரங்கநாதன் திறத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையும் திருத்தாயார் தாம் எடுத்துரைப்பதாக இப்பதிகம் அமைக்கப்பட்டது.

****வெருவாதாள்வாய்வெருவிவேங்கடமே ! வேங்கடமே ! என்கின்றாளால்,***
**மருவாளாலென்குடங்கால் வாள்நெடுங்கண்துயில்மறந்தாள் * வண்டார்கொண்ட**
**லுருவாளன்வானவர்தமுயிராளன் ஒலிதிரைநீர்ப்பௌவங்கொண்ட**
**திருவாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே ? 1**

| | | | |
|---|---|---|---|
| | (என் பெண்பிள்ளையானவள்) | வானவர் தம் உயிர் ஆளன் | நித்யஸூரிகளுக்கு உயிரா யிருப்பவனும் |
| வெருவாதாள் | அஞ்சாதவளாய்க் கொண்டு | ஒலி திரை நீர் | கோஷிக்கின்ற அலைநீர் பொருந்திய |
| வாய் வெருவி | வாய்பிதற்றுகின்றவளாய் | பௌவம் | கடலில் நின்றும் |
| வேங்கடமே வேங்கடமே என்கின்றாள்—; | | கொண்ட | கொள்ளப்பட்ட |
| என் குடங்கால் | எனது மடியில் | திரு ஆளன் | பிராட்டியை ஆள்பவனுமான எம்பெருமான் |
| மருவாள் | பொருந்துகின்றிலள்! | என் மகளை | எனது பெண்பிள்ளை திறத்து |
| வாள் நெடு கண் | வாள்போன்று நீண்ட கண்களிலே | செய்தனகள் | செய்தவகைகளை |
| துயில் | உறக்கத்தை | நான் எங்ஙனம் சிந்திக்கேன் | நான் நினைக்கத்தான் முடியுமோ? |
| மறந்தாள் | மறந்துவிட்டாள்; | | |
| வண்டு | வண்டுபோலவும் | | |
| ஆர்கொண்டல் | பூர்ண மேகம்போலவுமான | | |
| உரு ஆளன் | திருவுருவமுடையவனும் | | |

* * *—திருமங்கையாழ்வாராகிற பரகாலநாயகியைப் பெற்றெடுத்த திருத்தாயார், திருவரங்கநாதன் திறத்திலே தன் மகள் காதல்கொண்டு பித்தேறிக் கிடக்கும்படியை ஓவ்வொரு பாட்டில் ஓவ்வொரு வகையாகப்பேசி இப்பாடு படுத்தினனே எம்பெருமான் என்பதாய்ச் செல்லுகிறது. ... (1)

**கலையாளாவகலல்குல் கனவளையுங் கையாளா வென்செய்கேன்நான் ***
**விலையாளாவடியேனை வேண்டுதியோ வேண்டாயோ வென்னும்* மெய்ய**
**மலையாளன் வானவர்தம்தலையாளன் மராமரமேழெய்தவென்றிச்**
**சிலையாளன்* என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே. 2**

அகல் அல்குல் — அகன்ற நிதம்பமானது
கலை — வஸ்த்ரத்தை
ஆரா — தரிக்கின்றதில்லை ;
கை — கைகளானவை
கனம் வளையும் ஆரா — பொன் வளைகளை ஆள்கின்றன வில்லை ;
நான் என் செய்கேன் — (இதற்கு) நான் என்ன பண்ணுவேன் ?;
அடியேனை — "அடியவளாகிய என்னை
விலை ஆள் ஆ — பிறர்க்கு விற்கவும்உரிய வேலைக்காரியாக(க் கொள்ள)
வேண்டுதியோ — திருவுள்ளம் பற்றுவாயோ ?
வேண்டாயோ — மாட்டாயோ ?
என்னும் — என்கிருள் ;
மெய்யம் மலை ஆளன் — திருமெய்யமலையை இருப்பிடமாக வுடையவனும்
வானவர் தம் தலையாளன் — நித்யஸூரிகளுக்குத் தலைவனுயிருப்பவனும்
ஏழ் மராமரம் எய்த — ஸப்தஸால வ்ருக்ஷங்களைத் துளைத்த
வென்றி — ஜய சீலமான
சிலை ஆளன் — அம்பை உடையவனுமான எம்பெருமான்

என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேன்—.

* * *—உலகத்திலே ஸாமாந்யனை ஒரு க்ஷுத்ரபுருஷனிடத்தில் காதல் கொண்ட மாதர் அவனுடைய விரஹத்தினுல் மேனி மெலிந்து வருந்துவதாகக் காணும்போது ஸாக்ஷாத் புருஷோத்தமனிடத்தில் பெரும் பித்துகொண்ட பேரன்பர்க்கு அந்த எம்பெருமானுடைய விரஹத்தில் சரீரம் க்ருசமாகியொழியக் கேட்கவேணுமோ ? அப்படி சரீரம் மெலிந்தமை கூறுவது முதலடி. உடல் மெலிநதுபோகவே அரையில் வஸ்த்ரமும் கையில்வளைகளும் தங்கமாட்டாமல் கழன்ருெழியுமாதலால் அதனைச் சொன்னமுகத்தால் மேனிமெலிவு சொல்லிற்ருயிற்று. ஒரு பேச்சுப் பேசவும் சக்தியில்லாதபடி மேனி மெலிந்திருக்கச் செய்தேயும் இவளுடைய வாய்ப்பேச்சின் வீறு இருக்கும்படி காண்மின்—'**விலையாளாவடியேனை வேண்டுதியோவேண்டாயோ?**' என்கிருள். அதாவது—எம்பெருமானை முன்னிலைப் படுத்தி. 'என்னை உனக்கே அற்றுத்தீர்ந்த அடியவளாக ஆக்கிககொளள எணணமுண்டா இல்லையா ? சொல்லிவிடு' என்று துணிவாகக் கேட்கிருள் : '**விலையாளாவடியேனை**' என்பதற்கு இரண்டுபடியாகப் பொருள் கொள்ளலாம் ; 'அடியேனை விலையாளா வேண்டுதியோ ?' என்று அந்வயித்து, "கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய் குறளா வென்று, பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே" என்கிறபடியே பிறர்க்கு விலைக்கு விற்கவுமாம்படி உரிமைப்படுவதே சேஷத்வ காஷ்ட்டையாகச் சொல்லப்படுகையால் அப்படிப்பட்ட அடியவர்க்கு '**விலையாள்**' என்று பெயர் என்று கொண்டு அடியேனை விலையாளாக வைத்துக்கொள்ளத் திருவுள்ளமுண்டோ ? இல்லையோ ? என்று கேட்பதாகக் கொள்க. அன்றியே, **விலையாளா** என்பதை நேரே அடியேனுக்கு விசேஷணமாக்கி, **விலையாளாவடியேனை** = பிறர்க்கு விலைக்கு ஆட்பட மாட்டாத அடியேனை—பிறர்க்கு இழிதொழில் செய்து கூலிபெற்று வயிறுவளர்க்கின்ற மற்றவர்களைப் போலல்லாத அடியேனை, **வேண்டுதியோ வேண்டாயோ**—திருவுள்ளமுவந்து பற்றுவாயோ மாட்டாயோ ? என்கிருள் என்பதாகவுங் கொள்ளலாம்.

இப்படி இவள் மேனிமெலிந்து போகவும் பெரிய பெரிய பேச்சுக்கள் பேசவும் நேர்ந்தது அப்பெருமான் படுத்தினபாடு என்கிறது பின்னடிகளில். ... 2

**மானாயமென்னோக்கி வாள்நெடுங்கண்ணீர்மல்கும் வளையும்சோரும்***
**தேனாயநறுந்துழாயலங்கலின் திறம்பேசி யுறங்காள்காண்மின்***
**கானாயன்கடிமனையில் தயிருண்டுநெய்பருக நந்தன்பெற்ற**
**ஆனாயன்* என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேனே. 3**

மான் ஆய மென்னோக்கி — மானின் நோக்குப் போன்ற அழகிய நோக்கை உடையளான என்மகள்,
வாள் நெடு கண் நீர் மல்கும் — ஒளிபொருந்திய நீண்ட கண்கள் நீர் நிரம்பப் பெற்றிருக்கின்ருள் ;

| | |
|---|---|
| வளையும் | (இவளது) வளைகளும் |
| சோரும் | (கையில் நின்று) நழுவா நின்றன ; |
| தேனுய | தேனைக்கொண்ட |
| நறு துழாய் | மணம்மிக்க திருத்துழாயினாலாகிய |
| அலங்கலின் | மாலையினுடைய |
| திறம் | பரிசுகளை |
| பேசி | சொல்லிக்கொண்டு |
| உறங்காள் | உறக்கமற்றிருக்கின்றாள் ; |
| காண்மின் | (இந்நிலைமையைக்) கண்கொண்டு பாருங்கள் ; |

| | |
|---|---|
| கான் ஆயன் | காட்டிலே திரியுமவனும் |
| கடி மனையில் | காவலுள்ள வீடுகளிலே |
| தயிர் உண்டு | தயிரை உட்கொண்டு |
| நெய் பருக | நெய்யைக் குடிக்கும்படியாக |
| நந்தன்பெற்ற | நந்தகோபர் பெற்ற |
| ஆன் ஆயன் | கோபாலக்ருஷ்ணனுமான பெருமான் |
| என் மகளை செய்தனகள் | என் பெண்பிள்ளையைப் பண்ணின படிகளை |

அம்மனைமீர் அறிகிலேன்—.

* * *—இப் பெண்பிள்ளையின் கண்ணழகை நான் என்சொல்வேன்; இக் கண்ணழகிலே யீடுபட்டு அப்பெருமான் ஊணுமுறக்கமுமில்லாமல் வருந்தவேண்டியிருக்க, அவன்திறத்திலீடுபட்டு இவள் வருந்துகிறாளே, திருமலையருவிபோலே கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகுகின்றமை காண்மின்; கைவளைகள் கழன்றொழிவது காண்மின்; பெண்ணே! படுக்கையிற்கிடந்து உறங்கு; உறங்கினாயாகில் கண்ணீர்ப் பெருக்கு மாறும்' என்று நான் சொன்னாலும். என் பேச்சைச் சிறிதும் செவியேற்காது "எம்பெருமான் அணிந்துள்ள திருத்துழாயின் தேன்வெள்ளத்தை என்சொல்வேன்! அதன் செவ்வியை என்சொல்வேன்! அதன் தொடையழகை என்சொல்வேன்! அதன் குளிர்த்தியை யென் சொல்வேன்! அதன் பரிமளத்தை என்சொல்வேன்!" என்றிப்படி அவனது திருத்துழாயின் திறங்களை வாய்வெருவிக் கொண்டிருக்கின்றாளே யன்றிச் சிறிதும் கண்ணுறங்கப் பெறுகின்றிலள்.

இவளை இப்பாடுபடுத்தினவன் கோபாலகிருஷ்ண னென்கிறாள் பின்னடிகளில். கானாயன்—"கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம்" என்கிறபடியே கற்றா நிரைகளை யோட்டிக்கொண்டு காட்டிலே திரியவேண்டிய சாதியிற் பிறந்தவன். (இவ் விடதகில் ஆயன் என்பது இடையனென்ற பொருளில் வந்ததன்று; கானாயன்—காட்டிலே யானவன் எனறு பொருள.

மனைகள்தோறும் களவுவழியிற்புகுந்து தயிர் நெய் பால் முதலியவற்றைத் திருடி யுண்டு வயிறு வளர்ப்பதற்காகக் கண்ணனை நந்தகோபன் பிள்ளையாகப் பெற்றானென்று கேட்டிருந்தேன்; அப்படியில்லைபோலும்; என் மகளை இப்பாடு படுத்துவதற்கென்றே நந்தன் நோன்பு நோற்றுப் பிள்ளை பெற்றான் போலும்! என்ற கருத்துத்தோன்றத் "தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்ற ஆனாயனென்மகளைச் செய்தனகள்" எனப்பட்டது. 'கண்ணனுக்குக் காட்டிலே திரியவும் கவ்யங்களைத் திருடியுண்ணவுமே தெரியும்; வேறொரு நாகரிகத் தன்மையும் தெரியாது' என்றிருந்தேன்; இன்றுதான் 'அவனுக்கு இவ்வளவு வல்லமையுண்டு, ராஸிக்யமுண்டு, ச்ருங்கார விலாஸ ஸாமர்த்தியமுண்டு' என்றுணர்ந்தேன் என்பதாகவும் இதில் தொனிக்கும். கடிமனை = கட்டுங் காவலுமான மனை என்றபடி. அம்மனைமீர்! என்றது அயல்வீட்டுப் பெண்களை. ... .... 3

**தாய்வாயிற்சொற்கேளாள் தன்னாயத்தோ டணையாள் தடமென்கொங்கையே* ஆரச்சாந்தணியாள் எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும்***
**பேய்மாயமுலையுண் டிவ்வுலகுண்டபெருவயிற்றன் பேசில்நங்காய்!***
**மாமாயனென்மகளைச் செய்தனகள் மங்கைமீர்! மதிக்கிலேனே.** 4

நங்காய்!, மங்கைமீர்!—;

| | |
|---|---|
| தாய் வாயில் சொல் | தாயாகிய என்னுடைய வாய்ச் சொல்லை |
| கேளாள் | (என் மகள்) கேட்பதில்லை; |
| தன் ஆயத்தோடு அணையாள் | தனது தோழிமார்களுடனே கூடுவதில்லை ; |

தடமென் கொங்கையே — பருத்து மெல்லிதரன (தனது) முலைகளையும்
ஆர — அழகாக
சாந்து — சந்தனத்தினால்
அணியாள் — (முன்புபோல) அலங்கரிக்கின்றாளில்லை;
எம்பெருமான் திரு அரங்கம் எங்கே என்றும் — 'என் ஸ்வாமி யெழுந்தருளியிருக்கிற திருவரங்கம் எங்கே?' என்கிறாள்;
பேய் — பேய்ச்சியான பூதனை
மாய முலை உண்டு — முடியும்படியாக (அவளது) முலைப்பாலைப்பருகி
இ உலகு உண்ட பெரு வயிற்றன் — இவ்வுலகங்களையும் அமுது செய்த பெரிய திரு வயிற்றையுடையனான
மா மாயன் — மிக்க ஆச்சர்ய பூதன்
என் மகளை செய்தனகள் — என் பெண்பிள்ளைக்குச் செய்தவற்றை
பேசில் — சொல்லப்புகுந்தால்
மதிக்கிலேன் — அளவிட்டுச் சொல்லமாட்டுகின்றிலேன்.

* * *—நேற்றுவரையில் இவளுடைய போதுபோக்கு ஒருவகையாயிருநதது; இன்று வேறுபட்டுவிட்டது. என் வார்த்தையில் இவள் வைத்திருந்த மதிப்பு சொலலி முடியாது; நான் காலாலே ஏவினதைத் தலையாலே செய்து தீரும்படி அவ்வளவு கௌரவம் என் பேச்சில் வைத்திருந்த விவள் இன்று என் வார்த்தையைச் செவிதாழ்த்துக கேட்பதுஞ் செய்கின்றிலள். எனனிலும் மிக்க அன்பு பாராட்டி யிருந்தாள் தோழிமாா பககல்; அவா கண்விட்டு ஒரு நொடிப்பொழுதும் பிரியாதிருந்த விவளுக்கு இப்போது 'தோழிமார்' என்றால் விஷமாயிராநின்றதே. ஆகவே, தோழிமாரைக கொண்டு இவளைத் திருததிககொள்வோம் என்று நினைககவும் அவகாசமில்லையாயிற்று என்கை. **ஆயம்**—தோழியா.

தடமென்கொங்கையே **ஆரச்சாந்தணியாள்**=அழகுபெறத் தன்னை அலங்கரித்துக்கொள்வதிலும் விருப்பமற்றாள். 'நமது கணவன் நம்மை இப்படி உபேக்ஷித்திருக்க நமக்கு அலஙகாரமேதுககு?' என்று வெறுப்புற்றுக கிடககிறாளென்பதாம. எமபெருமான் திடீரென்று தனனோடு ஸம்ச்லேஷிக்க வநது சேர்ந்தால் அப்போது அவனது திருவுள்ள முககும்படி முன்னடியே முலைததடங்களை அலஙசரிதது வைத்துககொளள வேணடியிருந்தும் விரஹவ்யஸநததினால் அது செய்யமாட்டாதே கிடககிறாளென்கை. மென்கொங்கை= ஸ்தநங்களுககு வன்மை இலககணமாயிருக்க மென்மையையிட்டுக் கூறினதென்? எனனில. இங்குச்சொனன மென்மையாவது விரஹத்தைப் பொறுத்திருக்கமாட்டாமை. 'இவன் [illegible]குமாரன்' என்றால் 'பசி பொறுககமாட்டாதவன்' என்று பொருள்படுதல்போல. (இரணடாமடியின் முதலிலுள்ள ஏகாரம்—பாதம் பூரிப்பது.)

பேய்மாயமுலையுண்டு=பேய்ச்சியினுடைய மாயமுலையை—விஷந்தடவப் பெற்று க்ருத்ரிமமான முலையை, என்றுமுரைக்கலாம். எம்பெருமானால் தன் மகளுககு நேர்நத நிலைமைகளை முதலில் ஒருத்தியோடே சொல்லத் தொடஙகி 'நங்காய்' என ஒருமையாக விளித்துச் சொல்லிக்கொண்டிருக்கையில் க்ரமேண பல மாதா் வந்து கூடி நின்றமையால் 'மங்கைமீர்' எனப் பன்மையாக விளித்து முடித்தாள் திருத்தாய். ... ... 4

**பூண்முலைமேல்சாந்தணியாள் பொருகயற்கண்மையெழுதாள் பூவைபேணாள் ***
**ஏணறியாளெத்தனையும் எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும் ***
**நாண்மலராள் நாயகனாய் நாமறிய வாய்ப்பாடிவளர்ந்தநம்பி ***
**ஆண்மகனாயென்மகளைச் செய்தனகள் அம்மனைமீர் ! அறிகிலேனே ;** 5

பூண் முலைமேல் — ஆபரணங்களணிந்த முலையின் மேல்
சாந்து — சந்தனத்தை
அணியாள் — பூசுகின்றாளில்லை;
பொருகயல்கண் — ஒன்றோடொன்று சண்டை செய்யுமிரண்டு மீன்கள் போன்றுள்ள கண்களிலே
மை எழுதாள் — மையிட்டுக் கொள்ளுகிறாளில்லை;
பூவை பேணாள் — (தான் வளர்த்துக் கொண்டிருந்த பூவைப் பட்சியையும் ஆதரிக்கின்றாளில்லை;
எத்தனையும் — எந்த வஸ்துவையும்
ஏண் அறியாள் — நெஞ்சினால் நினைக்கிறாளில்லை;

| | |
|---|---|
| எம்பெருமான் திரு அரங்கம் எங்கே என்னும் | 'என் ஸ்வாமியின் திருவரங்கம் எங்கே?' என்பதொரு வார்த்தையையே சொல்லிக் கொண்டிருக்கிருள் ; |
| நாள் மலராள் நாயகன் ஆய் | செவ்வித்தாமரைப் பூவிற் பிறந்த பிராட்டிக்கு வல்லபனைவனும் |
| நாம் அறிய ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி | நமக்கெல்லாம் தெரியும்படியாகத் திருவாய்ப்பாடியில்வளர்ந்தவனுமான பெருமான் |
| ஆண்மகன் ஆய் | பெரிய ஆண் பிள்ளையாய்க் கொண்டு |

என் மகளை செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேன்—:

* * *—சிறுமிகட்கு லக்ஷணமாக முலைத்தடத்தில் சந்தனமணிந்துகொள்வதும் கண்களில் மையிட்டுக்கொள்வதும் விளையாட்டுக் கருவிகளினுல் போது போக்குவதும் என் மகட்கு மாறிவிட்டது. எம்பெருமான் விரும்பிவந்து அணையப்பெருத இம்முலைகளுக்கு அலங்காரம் வேணுமோ? என்று வெறுப்புற்றுப் **பூண்முலைமேல் சாந்தணியாள்** ; அல்லும் பகலும் அழுதுகொண்டே போதுபோக்கும்படியாக நம்மை எம்பெருமான் செய்துவிட்டனுதலால் அழுங் கண்களுக்கு அஞ்சனமில்லாமை ஒரு குறையோவென்று மனம் நொந்து **பொருகயற்கண்மையெழுதாள்.**

**பூவைபேணுள்**=பூவையென்று—கிளி, குயில், நாகணவாய்ப்புள்—இவற்றுக்குப் பெயர். சிறுமியர் லீலார்த்தமாகச் சில பறவைகளை வளர்த்துப் போது போக்குவதுண்டு. நேற்றுவரையில் இப்பரகாலநாயகியும் அங்ஙனமே போது போக்கா நின்றிருந்தவள் இன்று அதனருகுஞ் செலகின்றிலள். விஷத்தைப் பார்ப்பதுபோல அதனைப் பார்க்கிருள். **எத்தனையும் ஏணறியாள்**=இந்த லோகத்தைப்பற்றின சிந்தையே இவளுக்கில்லை என்றபடி. ஏண்-எண்ணுதல் ; முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'எம்பெருமான் திருவரங்கமெங்கே?. என்கிற வார்த்தையொன்றே தொடர்ந்து வருகின்றது.

இவளை இப்பாடு படுத்தினவன், ஆரென்ன, 'ச்ரியப்பதி' என்று ஒருபெண் மகளைக் கொண்டே தன்னை நிரூபிக்கவேண்டும்படி யிருப்பவனுய், நமக்கெல்லாம் நன்கு தெரியும்படியாகத திருவாய்ப்பாடியில் தயிர் நெய் வாரி விழுங்கி மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புககுக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலும் தீமைகள் செய்து திரிந்தவொருவனே இன்று பெரிய ஆண்பிள்ளைத்தனங்காட்டி என்மகளை இங்ஙனே செய்தானென்கிருள் திருத்தாய். ... ... .... ... 5

**தாதாடுவனமாலை தாராளே? என்றென்றேதளர்ந்தாள் காண்மின் ***
**யாதானுமொன்றுரைக்கில் எம்பெருமான் திருவரங்கமென்னும் * பூமேல்**
**மாதாளன் குடமாடிமதுசூதன் மன்னர்க்காய் முன்னம்சென்ற**
**தூதாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்சொல்லுகேனே?** 6

| | |
|---|---|
| தாது ஆடு வன மாலை | 'தாதுகள் நிரம்பிய வன மாலையை |
| தாராளே | எனக்குத் தத்தருளமாட்டாளே?' |
| என்று என்று தளர்ந்தாள் | என்று பலகால்சொல்லி சோர்வடைந்தாள் ; |
| யாதானும் ஒன்று உரைக்கில் | (அவளுக்கு அடக்கமுண்டாகும்படி நாம்) ஏதாவதொரு வார்த்தை சொன்னுல் (அதற்கு மறுமொழியாக) |
| எம்பெருமான் திரு அரங்கம் என்னும் | 'எம்பெருமான் திருவரங்கம்' என்கிற வார்த்தையொன்றே சொல்லுகின்ருள் ; |
| பூ மேல் மாது ஆளன் | பூவிற்பிறந்த பிராட்டிக்கு வல்லபனும் |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனும் |
| மதுசூதன் | மது வென்னுமசுரனைக் கொன்றவனும் |
| முன்னம் | முன்பொருகால் |
| மன்னர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| தூது சென்ற ஆளன் | தூது நடந்தவனுமான ஸ்வாமி |

என் மகளை செய்தனகள் நான் எங்ஙனம் சொல்லுகேன்?—.

* * *—என் மகள் ஓச்சலொழிவின்றியே கலகலவென்று எதையேனும் பேசிக்கொண்டிருப்பளே ; அப்படிப்பட்ட இவளுடைய பேச்செல்லாம் ஓய்ந்து விட்டது ; அவர்

மார்வணிந்த வனமாலை வஞ்சியாதே தருமாகில் மார்வில் கொணர்ந்து புரட்டீரே என்றாற்போலே அவ்வளவு வார்த்தையும் சொல்லமாட்டாதாளாய் 'வனமாலை தாராளே?' என்கிற இவ்வளவு வார்த்தையே சொல்லிக்கொண்டு தளர்கின்ருள். 'நங்காய்! இப்படிப் பட்ட தளர்ச்சி உனக்குத் தகாது' என்று ஹிதமாக நாம் ஏதாவது சொல்லத் தொடங் கினல் நம் வார்த்தை காதில் விழவொண்ணுதபடி காதைமூடிக்கொண்டு **திருவரங்கம், பெரிய கோயில்**' என்று கம்பீரமாக மிடற்ரேசை செய்கின்ருள்.

**வனமாலை** =" ஆபாத பத்மம் யா மாலா வநமாலேதி ஸா மதா" என்பர் வட நூலார்; திருமாலின் திருத்தோளிலிருந்து திருவடியளவும் தொங்குகின்ற மாலை வன மாலை யெனப்படும். இனி, **வனம்** என்பதற்குள்ள பல பொருள்களில், அழகு என்னும் பொருளையும் துளஸி என்னும் பொருளையும் விவக்ஷித்து, ' அழகிய மாலை, என்ருவது 'திருத்துழாய்மாலை' என்ருவது பொருள் கொள்வதும் நன்றே. 'வனம்' என்ற வட சொல்லுக்குக் 'காடு' என்றும் பொருள் கொள்ளலாம். இது கண்ணபிரானுக்கு அமைவது "காடுகளூடுபோய்....கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரா"

இவளை இங்ஙனே செய்வித்தவன் யாவனென்னில்; **பூமேல் மாதாளன்**=பரமஸு குமாரமான தாமரைப்பூவின்மேல் வாழ்ந்துகொண்டிருநத பிராட்டி 'இது நெருப்பு' என்று அந்த மலரை விட்டிட்டுத் தன் மார்பிலே வந்து சேரும்படியாக அவளை அபஹரித்துக் கொண்டவன். **குடமாடி**='நமக்கு ஒருத்தி போருமோ? ஊரிலுள்ள பெண்களெலலாரும் வேண்டாவோ' என்று குடக்கூத்தாடுகிற வியாஜத்தாலே திருவாய்ப்பாடிப் பெண்களை யெல்லாம் (அக்கூத்திலே தோற்பித்து) வசப்படுத்திக கொண்டவன்; **மன்னர்க்காய் முன்னஞ்சென்ற தூதாளன்**='செருப்பாக வுழைத்துக் காரியஞ் செய்யவல்லேன்' என்று தன்னுடைய விதேயத்வத்தைகாட்டிக்கொள்ளுமவன். **மதுசூதன்**='என்னையடுத்தவர்களுக்கு எப்படிப்பட்ட விரோதிகள் இருந்தாலும் அநாயாஸமாகப் பொடி படுத்திவிடுவேன்' என்று வீரத்தையும் காட்டிககொள்பவன், ஆகவிப்படிப்பட்ட மேன்மையும் நீர்மையுமான தனது பண்புகளை யெல்லாம் காட்டி என் மகளை இப்பாடுபடுததினுெருவன் என்ருளாயிற்று. 6

**வாராளுமிளங்கொங்கை வண்ணம் வேருயின வாறெண்ணுள் * எண்ணில்**
**பேராளன் பேரல்லால்பேசாள் இப்பெண்பெற்றேனென் செய்கேன் நான்?***
**தாராளன் தண்குடந்தை நகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த**
**தேராளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்செப்புகேனே?.** 7

| | |
|---|---|
| வார் ஆளும் | கச்சையிட்டுக் கட்டி ஆளக் கடவதான |
| இள கொங்கை | (தனது) இளமுலைகள் |
| வண்ணம் வேறு ஆயின ஆறு எண்ணாள் | நிறம் வேறுபட்ட விதத்தை நினைக்கின்ருளில்லை; |
| எண்ணில் | ஏதேனுமொன்றை எண்ணப் புகுந்தால் |
| பேராளன் பேர் அல்லால் பேசாள் | ஸர்வேச்வரனது திருநாமங்களைத் தவிர வேருென்றையும் பேசுகின்ருளில்லை; |
| இ பெண் பெற்றேன் நான் | இப்படிப்பட்ட பெண்ணைப் பெற்ற நான் |

| | |
|---|---|
| என் செய்கேன் | என்ன பண்ணுவேன்?' |
| தார் ஆளன் | திருமாலைசாத்திக் கொண்டிருப்பவனும் |
| தண் குடந்தை நகர் ஆளன் | குளிர்ந்த திருக்குடந்தை நகரை ஆள்பவனும் |
| ஐவர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| அமரில் | (பாரதப்) போரில் |
| உய்த்த தேராளன் | நடத்தப்பட்ட தேரையுடையவனுமான பெருமான் |
| | என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் செப்புகேன்—. |

***—என்மகளுக்கு அறிவு அடியோடேபோயிற்று; 'வீணுக நாம் இப்படி ஒரு விஷயத்திலே ஆசைவைத்ததனுல் மநோவியாதிகாரணமாகக் கொங்கை நிறம்வேறுபட்டதே!' என்று இதனையறியவும் மாட்டுகின்றிலள்;

[வண்ணம் வேறாகையாவது பசலைநிறங் கொள்ளுகை ; பசலை நிறத்தைப்பற்றிக் குறுந்தொகையில் ஒரு செய்யுளுண்டு ; அதாவது—“ ஊருண்கேணி யுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழிநீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே” (399) என்பதாம். ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப் பெறுகிற கேணியினுள்ளே படர்ந்துகிடக்கும் பாசிபோன்றது பசலைநிறம் ; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கை பட்டவிடங்களில் பாசி நீங்கும் ; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும். அது போல, கணவனுடைய கைபடுமிடங்களில் பசலை நீங்கும் (இயற்கையான அழகியநிறமே இருக்கும்.) அணைத்தகை நெகிழ்த்தவாறே அப்பசலைநிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித்தொடுவுழி—தொட்டவிடங்கள் தோறும். விடுவுழி விடுவுழி—விட்டவிடங்கள் தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினாலே.)]

**எண்ணில் பேராளன் பேரல்லால் பேசாள்** = இவளுக்கு இவ்வுலகைப்பற்றின சிந்தையும் தன்னைப்பற்றின சிந்தையும் கழிந்ததேயன்றி, பகவத் விஷயமான சிந்தை மாறவில்லை ; ஸர்வேச்வரனுடைய திருநாமங்கள் இவளது வாயில் வந்தபடியே யிருக்கின்றன.

**இப்பெண் பெற்றேன் என்செய்கேன் நான்** = இதற்கு இரண்டுவகைப் பொருள் : இப்படி என்வார்த்தை சேளாத அடங்காப்பெண்ணைப் பெற்றேனே ! இவளை இழந்தேனே ! அநியாயமாய்க் கெட்டேனே ! என்னசெய்வேன்—என்று வருந்திச் சொல்வதாகப் பிறர் நினைக்கவேணும் ; தனக்குள்ளே பெருமகிழ்ச்சி ; என்னைப்போலே பெண் பெற்றாருண்டோ ? இத்தனை சிறுபிராயத்திலே பகவத் விஷயத்தில் ஆழங்காற் படும்படியான பாக்கியம்வாய்ந்த பெண்ணைப்பெற்ற நான் என்ன நோன்பு நோற்றேனோ ? என்னும் மகிழ்ச்சியும் தொனிக்கும்.

[தாராளனித்யாதி.] ‘எல்லாரையும் ரக்ஷிப்பவன் நான்’ என்று தனிமாலையிட்டிருப்பவன் என்மகளை இப்படி அழிக்கிறானே ; திருக்குடந்தையிலே சாய்ந்தருளி லோகரக்ஷணம் பண்ணுகிறவன் இவளை இப்படி அழிக்கிறானே ; ‘பார்த்தஸாரதி’ என்று பேர்பெற்று அன்பர்க்குக் காரியஞ் செய்தவன் இவளுக்குக் காரியஞ் செய்யாதொழிகிறானே யென்கை. 7

**உறவாதுமிலளென்றென்று ஒழியாது பலரேசுமலராயிற்றால்***
**மறவாதே யெப்பொழுதும் மாயவனே! மாதவனே ! என்கின்றாளால்***
**பிறவாதபேராளன் பெண்ணாளன்மண்ணாளன் விண்ணோர்தங்க**
**ளறவாளன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர் ! அறிகிலேனே.**

| | |
|---|---|
| உறவு ஆதும் இலள் | ‘தாய் தந்தையர் என்கிற உறவு முறைகளைச் சிறிதும் உடையளல்லள்’ |
| என்று என்று | என்று பலகால் சொல்லி |
| பலர் | பலபேர்கள் |
| ஒழியாது | எப்போதும் |
| ஏசும் அலர் ஆயிற்று | குறை கூறும்படியான பழி விளைந்திட்டது ; |
| (இப்பெண்பிள்ளையோ வென்னில்) | |
| மறவாதே | மறவாமல் |
| எப்பொழுதும் | ஸர்வகாலமும் |
| மாயவனே ! மாதவனே ! என்கின்றாள்—; | |

| | |
|---|---|
| பிறவாத | கருமகாரணமான பிறப்பை யுடையனாகாத |
| பேராளன் | பெருமைபொருந்தியவனும் |
| பெண் ஆளன் | பெண்பிறந்தாரைத் தனக்காக வுடையவனும் |
| மண் ஆளன் | மண்ணுலகத்தவர்களை ஆள்பவனும் |
| விண்ணோர் தங்கள் அறவாளன் | நித்யஸூரிகளுக்குப் பரமதார்மிகனாயிருப்பவனுமான பெருமான் |
| என் மகளை செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேன்—. | |

***—தாய் என்றும் தந்தையென்றும் பல உறவுமுறையார் இருக்கும் போது அவர்களையெல்லாம் த்ருணமாக நினைத்துத் தள்ளிவிட்டுத் “ தெளிவிலாக்கலங்கல் நீர்சூழ்

திருவரங்கத்துள் ஓங்கும், ஒளியுளார்தாமேயன்றே தந்தையும் தாயுமாவார்'' என்று
ஒரு † பரபுருஷனையே ஸகலவித பந்துவுமாகக் கொண்டுவிட்டாளே இச்சிறுமி' என்று
நாட்டார் பழி தூற்றும்படியாயிற்று—என்று தாய் சொல்லுமிப் பேச்சில் வெறுப்பும் உகப்பும்
விளங்கும். 'என் மகள் அலர் தூற்றலுககு ஆளாய்விட்டாளே? நற்குடிக்குப் பெரும்பழி
விளைந்திட்டதே!' என்று வருந்திச் சொல்லுவதாக நாட்டார்ககுப் பொருள்படும். ஆபாஸ
பந்துக்களை யெல்லாம் விட்டிட்டு ''माता पिता भ्राता निवासश्शरणं सुहृद्गतिर्नारायणः'' என்றும் ''சேலேய்
கணணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத தாய்தந்தையும் அவரேயினி
யாவாரே'' என்றும் ஆப்தபந்துவாகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந்நாராயணனையே ''உன்றன்
னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது'' என்னும்படியே ஸ்திரமான உறவாகக்
கொண்டாளே! என்கிற உவப்பு உள்ளுறையும்.

பழிச்சொல் மிகமிக, அபிநிவேசமும் மிகுமாதலால் நாட்டாருடைய பழிப்பே காரண
மாக என்மகளுக்கு பகவத விஷயப்ராவண்யம் அதிகரித்துச செல்லுகின்றதென்கிருள்.
இரண்டாமடியில். **மறவாதே**=ஒருகால் என்மகளான பரகாலநாயகி எம்பெருமானை மறந்
திருந்தாலும் ஓயாதே அலர்தூற்றுமவர்கள் அவனையும் இவளையுஞ்சேர்த்துச் சொல்லிப்
பழிக்கையினுல் அதுகாரணமாக அவனுடைய ஸ்மரணம் இவளுக்கு மாறுவதில்லை; மறக்க
வொட்டாமல் செய்பவர்கள் பழிதூற்றும் நாட்டார் என்க. ஆச்சரியமான குணசேஷ்டிதங்களை
யுடையோனே! பிராட்டியை அநுபவிக்கும் பரமரஸிகனே!' என்று சொல்லிக்கொண்டே
போதுபோக்குகின்ருளென்மகள்.

**பிறவாத பேராளன்**=இதற்கு மூன்று வகையாகப் பொருள் கொள்ளலாம்; பேரா
ளன்—பெருமையுடையவன்; ஸர்வேச்வரன் என்றபடி. நாமெல்லாம் கருமம் காரணமாகப்
பிறப்பதுபோல பிறவாத ஸர்வேச்வரன்; ''अजायमानो बहुधा विजायते तस्य धीराः परिजानन्ति योनिम्''
என்கிறபடியே தன்னுடைய அநுக்ரஹமே காரணமாகப் பிறப்பவனேயனறிக் கருமமடியாகப்
பிறவாதவன் என்கை; (அன்றியே,) ''எங்நின்ற யோனியுமாயப பிறநதாய் இமையோர்
தலைவா!'' என்கிறபடியே நமககாகப் பலபல பிறவிகளெடுத்தும் பரிச்ரமங்கள் பட்டும்
நம்மிடத்துள்ள வ்யாமோஹாதிசயத்தினுல் 'இவர்களுக்கு நாம ஒன்றுஞ் செய்யவில்லையே,
ஒரு பிறவியும் பிறக்கவில்லையே நாம!' என்று நினைப்பனுகையாலே, அப்படிப்பட்ட
அவன் கருத்தாலே 'பிறவாத பேராளன்' என்கிறதாகவுமாம். (அன்றியே,) **பேராளன்**
என்றதற்குத 'திருநாமங்களையுடையவன்' என்று பொருளாய், **பிறவாத** என்றதைப்
பேருககு விசேஷணமாககொண்டு, ஆச்ரிதருடைய பிறப்பு அறுதற்குக காரணமான திரு
நாமங்களையுடையவன் என்னவுமாம்.

**பெண்ணுளன்**—பெண்பிறந்தாரையெல்லாம் இப்படி பிச்சேற்றித் தனக்காக்கிக்
கொள்ளுமவன் என்கை. **விண்ணோர் தங்கள் அறவாளன்**—நித்யஸூரிகளால் கொண்
டாடப்படுகிற திருக்குணங்களையுடையவன் என்று கருதது. ... ... 8

**பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்பாலூட்டாள் பாவைபேணுள் ***
**வந்தானோ! திருவரங்கன் வாரானோ! என்றென்றேவளையுஞ்சோரும் ***
**சந்தோகன்பௌழியன் ஐந்தழலோம்புதைத்திரியன் சாமவேதி ***
**அந்தோ! வந்தென்மகளைச்செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேனே. 9**

| | | | |
|---|---|---|---|
| பந்தோடு கழல் | (என் மகள்) பந்தையும் கழற்காய்களையும் | மருவாள் | தொடுகிறதுமில்லை; |
| | | பைங்கிளியும் பால் ஊட்டாள் | (தனது) பசுமைதங்கிய கிளிக்குப் பாலூட்டுகிறதுமில்லை; |

† பரபுருஷன்—அசல்புருஷன் என்றும் புருஷோத்தமன் என்றும் விவக்ஷிதம்.

